# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - புரட்டாசி - 2015 - செப்டம்பர்



கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்ற வேதாந்த வகுப்புகளில்
கலந்து கொண்ட மாணவர்கள் கோவிலூர் ஆதீனத்துடன்

39

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – புரட்டாசி – 2015 – செப்டம்பர் இதழ் – [illegible]

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்".
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

விண்ணுயர் ஞான விளக்கென விளங்கும்
விரிசிகை பிடித்த வெற்றித் திருவே
விஞ்சையர் முதலா விண்ணவர் ஈறா
விளக்கிட இயலா வேதமாச் சுடரே

மண்ணுயர் மாந்தர் மலரடி பணிய
மதிவழி நின்று விதிவழி மாற்றும்
மன்னவா செல்வக் கொற்றவாள் இறையே
மலர்பொலி கழனி வனமுறை மூன்று

கண்ணுடை நின்னைக் கலந்தவள் நெல்லை
காதலுக் குகந்த கருணையங் கடலே
காதலி நெல்லைக் காத்தவள் காவல்
கழனியில் இருந்தே எம்மையும் காக்கும்

பண்ணியல் தமிழ்சொல் பாண்டியன் மகளே
பாவலர் நாவில் தோய்ந்திடும் அமுதே
பல்வளை கொஞ்சும் நல்வளைக் கரத்தாய்
பணிந்திடும் அடியர் மனமுறை வாயே

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

கடந்த சில தினங்களாக நம்முடைய கல்வி நிறுவனங்களில் (மாணவர்கள், ஆசிரியர்கள்) இரத்ததானம் வழங்கப்பட்டுள்ளது. நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியில் ஆகஸ்ட் மாதம் 12ஆம் தேதி (12.08.2015) 60 மாணவர்கள் இரத்தம் வழங்கினார்கள். மறுநாள் கோலிலூர் ஆண்டவர் உடற்பயிற்சிக் கல்லூரியில் 40 மாணவர்கள் இரத்தம் வழங்கினார்கள். 7.09.2015 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் 55 மாணவர்களும், ஆசிரியர்களும் இரத்தம் வழங்கி உள்ளார்கள். மேலும் அவசர காலத் தேவைக்காக எப்பொழுது அழைத்தாலும் வந்து இரத்ததானம் செய்யத் தயாராக உள்ளோம் என்று மூன்று கல்வி நிறுவனங்களிலும் ஏறக்குறைய 30 பேர் வாக்குறுதி அளித்துள்ளார்கள். இந்தச் சேவை மனப்பான்மை நம் மனதிற்கு மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது.

மனிதனுடைய உடலிலே இரத்தம், நீர், வாயு ஆகிய இம்மூன்றும் தடைகள் ஏதுமின்றி இடைவிடாமல் சுழன்று கொண்டு இருக்க வேண்டியது. இயற்கையின் தேவை மட்டுமல்ல கட்டாயம். வாயுவும், நீரும் அவ்வப்போது வெளியேற்றப்பட்டு புதிதாக உட்கொள்வதால் இந்தச் சுழற்சி சீராக அமைகின்றது. இரத்தம் மட்டும் தானாக வெளியேறுவதில்லை. வெளியேறக்கூடாது. அதனாலே புதிய இரத்தம் சேருவது என்பது நடவாத ஒன்று. இரத்த ஓட்டத்தைச் சீராக வைத்திருக்கப் பலவிதமான தேகப் பயிற்சியினை நமக்குப் பயிற்றுவிக்கிறார்கள். ஆனால் சிலருக்கு இந்த இரத்த ஓட்டம் ஏதோ ஒரு காரணத்தினாலே ஏதோ ஒரு உறுப்பிலே தடைபெற வாய்ப்பிருக்கிறது. இதன் காரணமாகவே இருதய நோய்கள் தோன்றுகின்றன.

இரத்ததானம் அளிப்பதினாலே குறிப்பிட்ட அளவு இரத்தம் வெளியேற்றப்பட்டு, அந்த அளவிற்குப் புதிய இரத்தம் ஊறிப்

புத்துணர்ச்சியும் அளிக்கிறது. 18 வயதிற்கு மேல் 60 வயது வரை யார் வேண்டுமானாலும் ஆண்டிற்கு மூன்று முறை இரத்தம் அளிக்கலாம் என்றும், இழந்த இரத்தம் 3 நாட்களுக்குள் நிரப்பப்பட்டுவிடும் என்றும் மருத்துவர்கள் கூறுகிறார்கள். இரத்ததானம் செய்பவர்களுக்கு இருதய நோய்கள் வருதல் குறைவு என்றும் கூறுகிறார்கள். சில நோய்கள் எடை குறைவு உள்ளவர்கள் மட்டும் இரத்ததானம் செய்யக்கூடாது என்றும் எச்சரிக்கிறார்கள்.

எனவே, மருத்துவர்களுடைய ஆலோசனையைக் கேட்டு நம்மால் முடிந்த வரையில் இரத்ததானம் அளிக்க வேண்டும். தகுதியுள்ள ஆசிரியர்கள் மாணவர்கள் இந்த நல்ல சேவையைச் செய்ய வேண்டும். இவ்வாறு சேகரிக்கப்பட்ட இரத்தத்தை மாதக்கணக்கில் பத்திரமாகக் காப்பாற்ற முடியும் என்றும், இரத்தத்தினை வகைப்படுத்தி ஆபத்தான சூழ்நிலையில் உள்ளவர்களுக்கும், அறுவை சிகிச்சை செய்து கொள்பவரகளுக்கும் உதவ முடியும். உயிரைக் காப்பாற்றத் துணையாக இருக்க முடியும் என்றும் சொல்கிறார்கள். இத்தொண்டு உங்களை நல்ல பண்பாட்டிற்கும், வாழ்க்கையில் உயர்த்துவதற்கும் விதிவகுக்கும் என்பது திண்ணம். முயலுக!

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

# கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**நித்ய - அநித்ய வஸ்து விவேகம்**

சுபாநுவத் திருவாக்கு நூலில், மிகுதியும் சொல்லப்பட்டுள்ள தத்துவக் கோட்பாடுகளில், விவேகமும் ஒன்றாகும். பகுத்தாய்வு செய்து அறியப்படுவதை விவேகம் என்கிறோம். உள்ள பொருளை (வஸ்து) மட்டுமே பகுத்துப் பார்க்க இயலும்.

உலகியலில் துன்பம் மிகுதி எனவும், உலகு என்பதே தோற்ற மட்டுமே எனவும் சென்ற இதழில் கண்டோம். இங்கு துன்ப காரணங்களை ஆய்வு செய்து, இவை தற்காலிக அனுபவங்கள் (அநித்யம்) எனவும், தோற்ற மட்டுமான உலகம், நிரந்தரப் பொருள் (நித்ய வஸ்து) அல்ல, எனவும் அறிகிறோம். இத்தகைய அறிவு காரணமாக, எப்போதுமுள்ள பொருள் என்பது யாது என அறியுமாறு உந்தப்படுகிறோம். இதுவே நித்யா - அநித்ய வஸ்து விவேகம் எனப்படுகிறது.

விவேகம் பற்றிய ஆண்டவரது உபதேசம் வருமாறு :

**I பழம் பதிவுகளும் வினைப் பயனும் (வாசனை மற்றும் கர்மா) : திருவாக்கு :**

1) "ஆகாத வாதனையால் அல்லல் தினம் பட்டு உழன்று" (106 / 13)

2) "முன்னடங்கும் வாதனைகள் முற்றும் தவிராமே" (106 / 12)

3) " தந்தவினை வழிநின்று துன்பம் உறும் எம்மனோர்
சனியாத அமுதம் அயில " (91 / 139)

4) "பாவணைகள் யாதுமிலாப் பானநிலை எய்தாமல் " (114 / 19)

5) "பந்தமுறு தொந்தவினை சிந்தனையில் எண்ணாத
பரமபதம் ஆன கதியை " (91 / 139)

6) "முற்பவத்தில் யான்புரிந்த தீவினைகள்
முழுதகற்றும் முகத்தினானை" (6 / 3)

7) “வாசனைகள் யாதுமிலா மன்னு துரியம் தனிலே” (111/9)

8) “சந்ததமும் சின்மயமாய்த் தான் இருந்தால் தொந்தவினை வந்துறுமோ என்று மதியாதது என்ன மதி” (108/22)

உபதேசத் திரு வாக்கியங்கள் :

1) “நிகழ்காலமாகிய எதிர்காலத்தில் செய்காரியங்களை, பின் வருத்தமும் சௌக்யமும் அறிந்து செய்ய வேண்டும்”(154/58)

2) “தன்னைக் கர்ம கர்த்தாவாகக் காணும்போது கர்த்துரு தந்திரம் என்றும் அறிக” (159/77)

3) “போன காரியத்திலும் வருகிற காரியத்திலும் நினைவு தோன்றாமல் இருந்தால் சாட்சாத்காரம் தான்” (153/56)

கருத்துரை :

வாசனை எனப்படும் பழம் பதிவுகளும், கர்மா எனப்படும் பழஞ்செயல்களும் முற்பிறவி காரணமானவை. இவற்றால் தற்பிறப்பில் பந்த - பாசம், இன்ப - துன்பம் மற்றும் தற்போதைய செயல்கள் தொடர்கின்றன. இத்தகைய அனுபவங்கள், ‘நான் செய்தேன்’ எனும், தன்னைக் கர்த்தா ஆக்கும், அகங்காரம் தருபவை. நனவுச் சுமத்தி எனும் துரிய நிலையில் இவை நீங்கும். துரிய நிலை பெறும் வரையில், ஒருவர்தம் செயல்களை, ‘நான் செய்தேன்’, எனாது, ‘இறைவன், என்னைக் கருவியாக்கிச் செய்வித்தார்’ எனக் கருதுதல், கர்த்துரு தந்திரம் எனக் கூறப்படும் மன நிலையாகும்.

II பிறப்பு - இறப்பு :

திருவாக்கு :

1) “ஆலோன் இறந்தும், உமைபாகத்து அண்ணல் இறந்தும்
கமலம் உறை
நால் ஆனனத்தோன் முடி இறந்தும் நாரத ஆதியோர் இறந்தும்
கால ஆதிகளும் ஒழிந்து இறந்தும், ககனம் ஆதி அழிந்து
இறந்தும்
ஆலோகங்கள் இறந்தும் நின்றாய் அம்மே கொப்பை
உடையாளே....

(34 - கொப்புடையாள் வணக்கம் - 61)

2) "இற்றைவரை வீணாய்ப் பிறந்து இறந்து எய்த்து விட்டேன்" (86 / 134)

3) "சகம்தனிலே பிறந்திறந்து வீணாக நாள் கழித்துத் தவித்த எந்தன்" (65 / 99)

4) "அச்சப்பிறவி மரணம் எனும் ஆழிகடக்க ஏழை தனக்கு" (71 / 110)

5) "கீழான சர அசர உயிர்கள் பல யாவையும் கெம்பீர உததி தன்னில்
கிளர்கின்ற அலைகள் போல் தோன்றிய வரும் இவை கிளர்த்த ஒரு ஏது அற்று
வாழ்கின்ற இவை அலைகள் போலவே தோன்றி அதில் மாயும் என வேதம் அறைகில்
வந்த ஒரு அயன் ஆதி முந்த ஆனந்த கன மயம் ஆவது ஐயம் இல்லை;"(49 / 75)

6) "எத்திக்கும் தானாய் இறந்து பிறவாது அடைந்தால்
செத்துப் பிழைத்தல் அன்றே தீராதோ நெஞ்சகமே" (124 / 58)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1) "தன்னைச் சீவ பாவனையாகக் காண்கிறதே பிறவி" (145 / 24)
2) "சனன மரணமும் நினைவு மாத்திரமே" (152 / 51)
3) "பிரமா முதல் தம்பப் பூச்சி பரியந்தம், நிலைமையை இல்லாத படியினாலே" (157 / 67)
4) "தன்னைப் பஞ்சகிர்த்யம் உடையவனாகக் கண்டால் சனன மரணம் தனக்கு இல்லை" (156 / 67)
5) "காரண காரியமாய் உள்ளதுக்குப் பரிச்சின்னத்துவம் உண்டு" (159 / 78)

கருத்துரை :

மனிதர்கள் மட்டுமின்றி, தாவரம் போன்ற பற்பல உயிர்களும், கடல் அலைகளைப் போல தோன்றி மறைகிறார்கள். எனது தற்பிறப்பு

வீணாகிவிட்டது. அச்சம் தரும் இக்கடலைக் கடப்பது எளிதல்ல. படைக்கப்பட்டு, பிறப்புற்ற (காரிய ரூபமான) அனைத்திற்குமே கால வரையறையும் முடிவும் உண்டு. கடவுளாகப் போற்றப்படுவோருக்கும் முடிவு உண்டு. ஆனால், பிறப்பு இறப்பும் முடிவும் அற்ற, எத்திக்கும் தானாக (ஆத்மாவாக), உணர்ந்து விட்டால் நான் முடிவுற்ற ஆனந்த மயமாகி விடுவேன். அந்நிலையில், பிறப்பு - இறப்பு என்பவை கற்பனை (பாவனை) மட்டுமே.

III காண்பன (திரிசியம்) எனும் உலகம், பொருள் (விடயம்) :

திருவாக்கு:

1) "மானம் உற்றுவரு தாரம் மக்கள் மனை
மாடு நித்தமென எண்ணியே
மாளு சித்தம் உறை தீனம் உற்ற மடம்
மாய்வது எப்பகல் அறிந்திலேன்" (81 / 128)

2) "கண்டதே திரமாக் கவர்ந்திடும் கருத்தைக்
கழல் இணை நிழலிலே இருத்திக்
கொண்டிட எனக்கோர் திரம் இலை; கவராது
இருக்கவும் அருளது கொடுப்பாய்" (12 / 12)

3) "காண்பவனைக் காணாது காண்பவையைக் கண்டு உழன்று
வீண்கால மாக விழற்கு இறைப்பது என்னமதி" (103 / 3)

4) "ஓராது சடங்களையும் தெய்வம் என்றே
உணர்ந்திடும் இம்மார்க்கம் எலாம் உணர்வாய்க் காணும்
சீர் ஆகும் துணிவுதனை அருள்வாய்" (14 / 15)

5) "பத்துத் திசையும் பதினான்கு உலகும் மற்றும்
சித்து அசித்தும் சிற்சடமும் சிவரூபம் நெஞ்சகமே" (122 / 50)

உபதேசத் திருவாக்கியங்கள் :

1) "பிரபஞ்ச நாட்டத்திலே அசிரத்தை வேண்டும்" (152 / 49)

2) "பிரபஞ்சம் காலத்திரயத்தில் இல்லாத படியினாலேயும், ஒரு நினைவு வரும்போது மற்றொரு நினைவு அழிந்து போகிறபடியினாலேயும், காணப்பட்டன எல்லாம் அழிந்து

போகிறபடியினாலேயும், மித்தை என்று சொல்லுகிறதிலே சந்தேகம் இல்லலை" (158 / 73)

3) "பிரபஞ்ச மித்யா பாவனையினாலும், தன்மய பாவனையினாலும் காண்பான் காட்சி நீங்கும்" (139 / 11)

4) "வஸ்து நிர்ணயத்தில் பிரபஞ்சம் தான் அல்ல...என்று காண்க" (141 / 16)

**கருத்துரை :**

காணப்படும் பொருள்களை நிரந்தரம் (நித்யம்) என நினைப்பது தவறு. காண்பவன் யார் எனும் உண்மையை நாம் அறிய முயல வேண்டும். உணர்வற்ற சடப்பொருள்களைக் கூட தெய்வமாக்கிக் காட்டும் நெறிகளும் உள்ளன. உலகியலின் குணங்களைப் போற்றாது, அது தோற்றம் மட்டுமே என உணர்ந்தால், காணப்படும் அனைத்தும் ஒரே வடிவம் எனப் புரியும்.

(விவேகம் பற்றிய ஆண்டவரது உபதேசம் அடுத்த இதழிலும் தொடரும்)

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

"சாத்திரப்பை நோய்கள் ஏது ? சத்தி முத்தி சித்தியே"

அவன் இருக்குமிடம் தூரம் தூரம் என்று சொல்பவர் சோம்போறிகள். அண்டங்கள் அனைத்திலும் பரந்து காணப்படும் பராபரமாய் நிற்பவன். இருக்கக் கூடிய இடத்தை விட்டு விட்டு, இல்லாத இட்த்தை நாடி ஓடுகின்ற ஊமை மக்களே! அவன் நம் உள்ளத்தில் உள்ளான் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள் என்பார் சிவ வாக்கியர். இதைனயே அப்பர் பெருமான், சோதிவடிவாய் மறைந்துள்ள இறைவனைக் காணும் வழி, எந்தவழி ? என்று சொல்லுகின்ற போது, உலகியல் உவமைகளைக் காட்டி எளிதாக நாம் அவனை அடையும் வழியைக் காட்டுகிறார். பண்டைய மனிதன் நெருப்பை உண்டாக்க நினைத்தபோது, அவன் ஒரு மரத்துண்டுடன் இன்னொரு

மரத்துண்டைத் தேய்த்தான். அந்த உராய்விலிருந்து தோன்றிய நெருப்புப் பொறியைக் கொண்டு தீயை வளர்த்தான். இன்றும் சிலர் ஆலய வேள்விச் சாலைகளில் வேள்விக்கான தீயைப் பெற ஒரு குவியாடியைச் சூரியன் முன் காட்டி, அதன் கீழே ஒரு பஞ்சை வைத்துச் சூரியனின் ஒளியை மையப்படுத்தி நெருப்பை உண்டாக்குவர். அந்த மரத்துண்டுகளில் மறைந்துள்ள நெருப்பை நாம் இவ்வாறு கட்டையைக் கடைந்து வெளிப்படுத்துகிறோம். எனவே அதன் உள்ளே நெருப்பு மறைந்துள்ளதை நாம் இல்லையென்று சொல்ல முடியுமா ? கட்டையைக் கடைவதன் மூலம் அதனை நாம் வெளிப்படுத்துகிறோம். நெய் வேண்டுவோர் பாலைக் காய்ச்சி, அதனைத் தயிராக்கி, அத்தயிரை மத்தால் கடைந்து அதன் மூலம் வரும் வெண்ணெயைப் பெற்று, அதனை உருக்கி நெய்யைப் பெறுவர். எனவே பாலில் மறைந்துள்ள நெய்யை இவ்வாறு பெறுகிறோம். விறகில் தீயும், பாலில் நெய்யும் மறைந்திருப்பது போல இறைவனும் நம் அகத்தின் உள்ளே மறைந்துள்ளாம், அவனைக் காண வேண்டுமானல், உறவு என்னும் மத்தை விட்டு, உணர்வாகிய கயிற்றினால் நன்கு இழுத்துக் கடைந்தால், இறைவன் வெண்ணெய் போல முன்னே தோன்றுவான் என்ற கருத்தமையப் பாடிய பதிகம் இது.

"விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறயை நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"

இதே போக்கு, சிவவாக்கியர் பாடலிலும் காணப்படுகிறது

"நாலுவேதம் ஓதுவீர் ஞானபாதம் அறிகிலீர்
பாலுள்நெய் கலந்தவாறு பாவிகாள் அறிகிலீர்
ஆலமுண்ட கண்டனார் அகத்துள் இருக்கவே"

எனப் பாடுகிறார்.

விதையின்றி எதுவும் தோன்றாது. அனைத்திற்கும் ஒரு மூலப்பொருள் வேண்டும். இந்தக் குறை இல்லாத தன்மை கீழ் மேலாகிய எவ்வுலகத்திலும் இல்லை. அடிவாரம் இன்றி மாளிகை

அமைக்க இயலுமா ? பெற்ற தாயை விற்கின்ற பேதைகளே சித்து இல்லாச் சீவனால் என்ன பயன் ? (சித்து இங்கு அறிவைக் குறித்தது)

"வித்து இன்றிச் சம்பிரதாயம் மேலுமில் கீழுமில்
தச்சு இலாது மாளிகை சமைத்த வாறும் அது எங்ஙனே ?
பெற்றதாயை விற்று அடிமை கொள்ளுகின்ற பேதைகள் !
சித்த இலாதபோ அசீவன் இல்லை இல்லை இல்லையே"

என்று பாடுகிறார் சித்தர் சிவ்வாக்கியர்.

நாடியை ஒடுக்கி மூச்சுப் பயிற்சி என்னும் வாசியோகத்தை (பிராணாயாமத்தை) அறியாதவர்களாய, உலகிலே மாண்ட மக்கள் எத்தனை ? பிராணாயாமம் என்னும் மூச்சுப் பயிற்சியில் வல்லமை பெற்றவன், தன்னுடைய இரு நாசிகள் வழியாக மூச்சை உள்ளிழுத்து வெளிவிடும் போது சங்கு ஊதுவது போன்ற ஒலியை எழுப்புவான். அவ்வாறு ஊத வல்லவன் மங்கையைப் பாகம் கொண்ட ஈசனோடு கூடி வாழ்வது திண்ணம் என்று கூற வந்த சிவவாக்கியர்.

"சங்கு இரண்டு தாரை ஒன்று சன்னபின்னல் ஆகையால்
மங்கிமாளுதே உலகில் மானிடங்கள் எத்தனை ?
சங்கு இரண்டையும் தவிர்த்துத் தாரை ஊதவல்லிரேல்
கொங்கை மங்கை பங்கரோடு கூடிவாழல் ஆகுமே"

என்று பாடுகிறார்.

உலகிலேயே வாழும் மாந்தர்கள் வாழ்க்கை நிலையாமையை உணருவதில்லை. சித்தம் போனபடி வாழ்கின்ற இவர்களுக்குக் காலனிடம் இருந்து ஓலை வரும்போது என்ன செய்வார் ? மரணம் வரும்போது வணங்கினார்க்குத் துணை வருவான் சிவன். இறுதியில் நம் சீவனுக்குச் சிவனே உற்ற துணையாவான் என்பதையும் தம் வாக்கினால் பதிவு செய்து வைக்கிறார் சிவவாக்கியார்.

"நீளவீடு கட்டிநீர் நெடுங்கதவு சாத்துவீர்
வாழவேணும் என்றுஅலோ மகிழ்ந்து இருந்த மாந்தரே !
காலன் ஓலை வந்தபோது கைகலந்து நின்றிவிடும்
ஆலம்உண்ட கண்டர்பாதம் அம்மைபாதம் உண்மையே"

"வீடுஎடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யுமாய்
மாடுமக்கள் சுற்றம்என்று இருக்கும் மாந்தர்கள் !"

"ஓடுபெற்ற அவ்விலை பெறாதுகாண் உடலமே"

சித்தர்கள் சிவனை அன்றி எவரையும் வணங்குவதில்லை "சிவமே செம்பொருள்" என்பதை உணர்ந்தவர்கள். கண்ட கண்ட கோயில் தெய்வங்களை வணங்கும் வழக்கம் அவர்களுக்கு இல்லை. சிவன் மட்டுமே அவர் வணங்கும் தெய்வம் இல்லை இல்லை எவரெல்லாம் சிவனை வணங்குகிறார்களோ, அவரெல்லாம் அவர்கட்குத் தெய்வம் அதனால் தான் அப்பர் பெருமான் ஆகிய ஆளுடைய அரசு தம்முடைய பதிகம் ஒன்றில்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்கு ஏகாந்தர் அல்லார் ஆகில்
அங்கம் எலாம் குறைந்து அழுகுதொழு நோயராய்
ஆஉரித்துத் தின்றுஉழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தர்க்கு அன்பர் ஆகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவுளாரே"

என்று பாடுகிறார். இதைப் போலவே சிவவாக்கியர் பாடலும் அமைந்துள்ளது.

"அண்டர்கோன் இருப்பிடம் அறிந்துஉணர்ந்த ஞானியார்
பண்டுஅறிந்த பான்மைதன்னை யார்அறிய வல்லரே ?
விண்டவேதப் பொருளைஅன்றி வேறுகூற வகைஇல்லாக்
கண்டகோவில் தெய்வம்என்று கைஎடுப்பது இல்லையே"

என்பார் சிவவாக்கியர்.

சித்தர்கள் புரட்சியாளர்களாகவே இருந்துள்ளனர். கோவில், தீர்த்தம் என்ற சடங்குகளில் நாட்டம் கொள்ளாதவர்கள். ஆடம்பரமான, ஆரவாரமான வழிபாடுகளை விரும்பாது, உளமார வழிபடும் தன்மையர். பேச்சு நாத்திகர் பேச்சுப் போல் தோன்றினாலும், சித்தர்கள்தாம் மெய்யான ஆத்திகர்கள். தேங்காயின் உள்ளே இளநீர் இருப்பதுபோல் சிவன் நம் உள்ளத்தையே கோயிலாய்க் கொண்டான். இப்படி இறைவன் நம் உள் இருக்கையில் நாம் ஆரவாரமான வழிபாடு செய்ய வேண்டிய அவசியமில்லை. சிவவாக்கியர் பாடல் கீழ்வருமாறு சொல்கிறது. "செய்ய தெங்கிலே இளநீர் சேர்ந்த காரணங்கள் போல்"

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### IV/01/13/II சுக்கிரன் கதை – சென்ற இதழ்த் தொடர்ச்சி

**தத்துவப் பகுதி :**

பிறகு முனிவருக்கும் எமனுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலே, இக்கதைக்கான தத்துவப் பகுதியாகும். இதில் 1) தவசீலரான முனிவரே மோகமும் கோபமும் அடைதல், 2) சாபம் கொடுத்தற்கான தகுதி, 3) ஒரே உயிர் பற்பல பிறப்புக்களை அடைதல், 4) மேலுலக (சுவர்க்க) வாழ்க்கை, மற்றும் 5) முனிவர்களுக்கான துன்ப நீக்கம், போன்ற கருத்துக்கள் பேசப்படுகின்றன.

எமன், பிறகு முனிவருக்குச் செய்த உபதேசமாவது :

1) விதிக்கப்பட்ட கடமையை மட்டும் சரியாகச் செய்யும் தன்னை, தன்னலம் பேணும் முனிவர் சபித்துவிட இயலாது.
2) உலகில் பிறந்துவிட்ட அனைவருமே - உருத்திரரும் விட்டுணுவும் கூட - எமன் கைப்பட்டாக வேண்டும். இதனை எமன் "எமது விதியன்று இந்நியதி என்றும் உள்ளபடியாகும்" எனக் கூறுகிறார்.
3) மேற்கூறியனவெல்லாம் உலகியல் (வியவகார) நிலைக்குப் பொருந்தும். ஆனால் பாரமார்த்திகமாக (ஞானியின் நிலையில்) அனைத்தும் பரம்பொருளே ஆதலால், செயல் புரிதல் மற்றும் பயன் அனுபவித்தல் போன்றன இல்லை. (அதாவது, பிறப்பு - இறப்பு என்பவை இல்லை. இறப்பு இல்லையாயின் எமனுக்கு வேலை இல்லை).

**முனிவர்தம் மோகமும் கோபமும் :**

பேராவல் (மோகம்), இன்ப விருப்பம், புத்திரபாசம், கோபம் என்பனவெல்லாம் தன்னலம் காரணமாக உண்டாவன. உலகியலிலேயே இவற்றை விட்டு நாம் நீங்க வேண்டும்.

மோகமானது,

"மாசறு தவத்தால், நூலால், மகங்களால், தனத்தால் போகா",
(மகங்கள் = வேள்விகள்)

எனவும், ஆனால்

**"தேசுடைய நல்ல தெரிசனம் மூலமாகத் தீரும்",**

(தெரிசனம் = பெரியோர் கூட்டு, சத்சங்கம்) எனவும் கூறப்படுகிறது.

ஆனால், தவமுனிவரே இவற்றிற்கு ஆளாதல் ஏற்புடையதன்று

**சாபம் கொடுப்பவரது தகுதி :**

**"கற்பதான மறைதருசிற் கண்ணதெங்கே சிரத்தையதாய்**
**நிற்பதெங்கே உயர்வெங்கே நெடியோர் விளக்கும் இந்நெறிக்கே**
**அற்பரான குருடரென அயர்வது என்னத் தம்வினையால்**
**உற்பவிக்கும் செயல்பாராது உருத்துச் சபிக்க உரியாயோ",**

(சிற்கண் = ஞானப் பார்வை, சிரத்தை = ஆன்றோர்வாக்கில் நம்பிக்கை, அயர்தல் = மோகமுறல், உற்பவி = உண்டதால், உருத்து = கோபம்)

என பிருகு முனிவரை எமன் சாடுதலினால் அறிகிறோம். மேலும், செயல்களும், அவற்றாலுண்டாகும் பிறப்பு, முன்வினையின் காரணமானவை எனவும் எமன் கூறுகிறார். இதன் மூலமாக, சாபம் கொடுப்பவர், ஞானமும் சிரத்தையுமுடையவராயும், மோகம் கோபம் போன்ற தன்னலமற்றவராயும் இருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது.

**மேலுலக வாழ்க்கையும் ஒரே உயிர் பற்பல பிறப்பு அடைதலும் :**

'தனதாதை கழல் பிரியான், பெரும்பதத்தோன்' எனவெல்லாம் போற்றப்படும், பார்கவன், மிக நல்ல இளைஞன்; இறவா நிலையிலேயே சுவர்க்கம் செல்லும் தகுதிபெற்ற முனிவன்; மேலோர் நிறைந்த அவ்வுலகில் பகலை இரவாக்கியவன். ஆனால் அவனுமே,

**"முன்னர் நாம் புரிந்த தருமமெல்லாம் முடியும் முடியும் எனுங் கருத்தால்",**

கீழே விழுந்து, புவியில் பற்பல பிறப்புற்று, மறுபடியும் ஏற்றம் பெற வேண்டியுள்ளது. ஆனால், பார்கவன் அடைந்த பல பிறவிகளில் மிகுதியான ஏற்ற இறக்கம் தெரிகிறது. சுவர்க்கம் பெற்றவனும் கூட புண்ணியப்பலன் தீர்ந்ததும் புவியில் பிறக்க வேண்டும் எனும் நியதி உறுதி செய்யப்படுகிறது. அவ்வாறு பிறத்தற்கான வரிசைப்பாட்டை,

"விழுந்தான் புவன மண்டலத்தின் மெய்யை மறந்தான் இவன்
சீவன்
கொழுந்தார் மதியின் கலைசேர்ந்து குளிர்ந்த பனியாய்
நெல்லாகிச்
செழுந்தாள் நெல்லை தசார்ணதேச மறையோன் சமைத்தருந்த
எழுந்தாதுவுமாய்ச் சுக்கிரன் வந்து இவன் பாரியைபால்
மகவானான்".

என வசிட்டர் கூறுகிறார். இவன் அடைந்த பல பிறப்புகளைப் பற்றி, கதைப்பகுதியில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

**முனிவர்களுக்கான துன்ப நீக்கம் :**

'பிருகு, பார்கவன், மற்றும் பெடைமான் பெற்ற' மகன்பால் பின்னா நின்ற பேதமை யுற்ற முனிவன் (பார்கவனின் மறுபிறப்பு) ஆகியோர் முனிவரான பின்னரும் துன்புற்றமை பற்றிக் கூறி, இத்தகைய துன்பத்தின் காரணமென, அவர்கள், கோபம், மோகம், பற்று போன்ற உலகியல் செயல்களுக்கு ஆட்பட்டமை கூறப்படுகிறது. இத்தகைய நிலை, முன்வினை (வாசனை) மற்றும் தற்போதைய மனம் மூலமாக வருகிறது. மனமற்றுப் போனால், 'இன்னல் கூர் காதல் ஐயம் இதாகிதம் (விருப்பு வெறுப்பு) எல்லாமின்றி' வாழலாம் எனப்பட்டுள்ளது.

**உலகியலும் எப்போதுமுள்ள உண்மையும்**
**(வியவகாரிகம் மற்றும் பாரமார்த்திக நிலைகள்) :**

பல முற்பிறப்புக்களில் நாம் பெற்ற அறிவானது பற்றடைகிறது. இதுவே வாசனை எனத் தொடர்கிறது. பிரம்ம சங்கற்பமானது பிரதிபலிப்பாகி (மாயை) வாசனையை ஒளிர்விக்கிறது. மாயையால் ஒளிரும் வாசனை நம் மனதைப் புறாடனாகவும் செயல்களாகவும் காட்டுகிறது. இது ஓர் நீண்டகனவு (பிரதீதி) போன்றது. இவ்வாறு காரண காரியமற்றமையால் உலகம் கற்பனையாகிறது.

"கரியாய் சமமாய் நொய்தாகிக் கலந்த விகற்பம் தீர் அறிவில்
பரியாநின்ற உலகமெலாம் பற்றிப்பாய்தல் கண்ணாடியில்
தெரியாநின்ற பொருள்போலாம் செறிகாரண காரியமின்றிப்
புரியாநின்ற உலகெல்லாம் பொலிந்து பிரமத்திடை இருக்கும்"

(கரியாய் = சாட்சியாய், நொய்தாய் = தெளிவாய், பரியா = பயனின்றி, பாய்தல் = புலப்படல்)

கற்பனை எனக் கூறப்பட்டாலும் அது தனக்குத் தோன்றிக் கொண்டே உள்ளதே; தனக்குமட்டுமின்றி அனைவருக்குமே அது ஒரே மாதிரியாகத் தோன்றுதல் இயலுமா என்பன போன்ற ஐயங்களுக்கு, "அது கானல்நீர் போன்றது" எனும் உருவகம் தரப்படுகிறது. (நீர் இல்லை எனும் உண்மை அறியபட்ட பின்னரும் கூட அனைவருக்கும் ஒரே மாதிரியாக கானல்நீர் தோன்றுகிறது).

பிரம்மம் சாட்சியாய், சூக்குமமாய், வேறுபாடற்ற ஒன்றாய் உள்ளது. அது பிரதிபலித்து நம் வாசனைக்கேற்ப மனமாகிறது. நம் மனதிலேயே உலகம் தோன்றுகிறது. மனமற்றுப்போனால் உலகம் இல்லை. அனைத்துமே பிரம்மம் எனும்போது உலகம் என தனியே ஒன்று இல்லை. ஆனால் உலகத்தை நாம் காண்கிறோம்.

**"கீற்றுப்பலசேர் ஒருகற்போல் கிளரும் சகங்கள் செறிபிரமத்**
**தோற்றப்படும் இரண்டென்னத் தொடர்காரணம் வேறிலாமையினால்**
**ஆற்றச்சகம் என்று ஒன்றிலதாம் அறிவே உளதாம்**
**அனைத்துலகும்**
**தேற்றப் பிரமத்து இருக்குமிவை தெளிய வெள்ளி கதை**
**கேட்பாய்",**

(சகம் = உலகம், ஆற்ற = உண்டான)

எனும் செய்யுளால் மேற்கூறிய கருத்து பெறப்படுகிறது மேலும், ஒரே கல்லில் பல கோடுகள் காணப்பட்டாலும், கல் ஒன்றே உண்மை. கோடுகள், கல்லினுள் அடங்கியவை. இதே போல, பல வகையான பெயர்கள் மற்றும் வடிவ (நாமரூப) வேறுபாடுகள் எல்லாம் தோற்றம் மட்டுமே இவை பிரம்மத்தில் அடங்கியவை.

அனைத்துமான ஒரே பிரம்மம் எனும் போது, காண்பான், காணப்படுதல், காட்சி என்பனவற்றிற்கு (திரிபுடி) இடமில்லை. தன்னைத்தானே காண (அனுபவிக்க) வேண்டும். இது நனவில் சுமத்தி போன்ற துரியநிலையாகும். இதனை,

**"எழுதுவோனும் எழுதிடமும் எதிர்காண் பொருளும் இலதாகி**
**வழுவிலாத விண்ணிடையே வந்து தோன்றும் ஓவியந்தான்**
**பழுதின் மேவும் தனைத்தானே பாராநிற்கும் பல பொறியும்**
**நழுவுதுயிலினால் அன்றி நனவால் மேவும் கனவொக்கும்".**
எனக் கூறப்பட்டுள்ளது.

மேற்கூறிய விளக்கம் மூலமாக, தவசீலர், முனிவர் எனப்படுவோர், வாழ்க்கையை திரிசியமாகக் காணாது (வியவகாரிக நிலை) பிரம்ம ஞானமாக (பாரமார்த்திக நிலை) உணர வேண்டும் என வசிட்டர் அறிவுறுத்துகிறார்.

தத்துவப் பகுதியின் முடிவாக பிறகுவும், சுக்கிராச்சார்யரும்,

**"திரிசிய சித்தம் என்னும் தீப்பகை தீரமாற்றி**
**வருதிரை இலாத நீர்போல் மாசறு நிலையில் வாழ்ந்தார்".**
(திரிசியம் = உலகியல் / காண்பன, சித்தம் = மனம், திரை = அலை)
எனக் கூறப்படுகிறது.

*(தொடரும்...)*

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (உபநிடதப் பொருளுரைத்த படலம்)

### வேறு

என்று வீரபாண் டியன்மனத்(து) உவப்புஉற இதனை
அன்று கூறினாம் சைமினி முனிவர அறிமோ
நன்று சாலிதன் மேல்பொருள் இலைஎன நவின்றான்
மன்றுள் ஆடிய பதம்தொழு தமிழ்முனி வரனே 86

கேட்ட மாதவச் சைமினி உவகைமீக் கிளைப்ப
நாட்டம் மூன்றுடை நாயகற்(கு) அன்புடை நலத்தாய்
வேட்டமாம் மாமதுப் பிரியன்மேல் என்செய்தான் வினையை
ஓட்ட வல்லபாண்டி யற்குமே வியாதுநீ உரைத்தாய் 87

அனைய யாவையும் விடா(து)எடுத்த(து) அமைதியால் என்று
துனைய வேண்டலும் வீரபாண் டியன்எதிர் தொழுது
விநயம் வல்லமா முனிவரன் துதித்தமை விரித்துப்
புனைய ஓதுகஎன்(று) இரத்தலும் யாமிது புகன்றால் 88

அங்கு நாம்அவற்(கு) உரைத்தவா றேஉனக்(கு) அறைவாம்
பொங்கும் ஆர்வத்தில் கேட்டியால் என்(று)இது புகல்வான்
எங்கும் ஆகிய சிவபிரான் இணைஅடிக்(கு) அன்பு
தங்கு மாதவத்(து) உயர்ந்(து)ஒளிர் தமிழ்முனித் தலைவன் 89

*உபநிடதப் பொருள் உரைத்த படலம் நிறைவுற்றது*

## மதுப்பிரியர் துதி உரைத்த படலம்

அருள்க சிற்கன சொரூபதே சோமய அமல
அருள்க யாவைக்கும் சாட்சியர் அமரக ளங்க
அருள்க யாரும்சொல் எவைக்கும் மேல்ஆகிய அமர
அருள்க பற்பல மூர்த்தியாய் அமரும்மா தேவா 1

அருள்க பல்வகை உபாதியும் கழன்றஆநந்த
அருள்க நிர்க்குண நிராமய அப்பிர மேய
அருள்க வந்(து)அடி அடைந்தவர்க்(கு) அஞர்த்திறம் அறுப்பாய்
அருள்க வெள்ளிபொன் இரும்(பு)எனும் முப்புரம் அழித்தாய் 2

அருள்க மாமறை முதல்எழுத் தின்பொருள் ஆனாய்
அருள்க மாமறை அந்தத்தால் துதித்திட அமர்வாய்
அருள்க மாமறை மொழிபரி தவி(சு)என அமைத்தாய்
அருள்க மாமறை அந்தமும் அள(வு)இடப் படாதாய் 3

எந்த வான்பொருள் இடத்துநின்(று) யாவும் உண்டாகும்
எந்த வான்பொருள் இடத்(து)எலாம் ஒடுங்கிடும் எவைக்கும்
எந்த வான்பொருள் உபாதானம் ஏதுவாய் இருக்கும்
அந்த வான்பொருள் ஆகிய நின்அடி அடைந்தேன் 4

எந்த வான்பொரு ளால்மதி கதிர்முதல் இயங்கும்
எந்த வான்பொரு ளால்வளி உணக்கும்தீ எரிக்கும்
எந்த வான்பொரு ளால்நிலை பெறும்உல(கு) எல்லாம்
அந்த வான்பொருள் ஆகிய நின்அடி அடைந்தேன் 5

அவனி அப்(பு)அழல் வாயு ஆ காயமாம் ஐந்தும்
கவல்அ வற்றின்வி காரம்ஆம் காரிய சகத்தும்
இவரும் எப்பொருள் வடிவமோ இயம்பும்அத் தகைய
உவமன் இல்பல காரிய உருவநின் தொழுதேன் 6

கலைம டந்தைசேர்ந்(து) அயன்எனக் கவின்றுவிண் ஆதி
மலை(வு)அ ரும்பிர பஞ்சத்தை வழங்குவாய் போற்றி
அலைம டந்தைசேர்ந்(து) அரிஎன இருந்தவை அனைத்தும்
நிலைபெறும்படி புரந்திடு நிமலேன போற்றி 7

உமையொடும் கலந்(து)உ உருத்திரன் எனும்பெயர் உற்றே
அமைத ரும்படி சங்கரித்(து) அருள்பவ போற்றி
கமைஇல் மாப்பிர ளயத்துமா காலருத் திரனாய்ச்
சமைய யாவையும் தடிந்துதாண் டவம்செய்வாய் போற்றி 8

வசுக்கள் சூரியர் உருத்திரர் மருத்துவர் அழலோன்
இசைக்கும் மாமதி சித்தர்சாத் தியர்பிதிர் இவர்முன்(பு)
அசுத்த தேவர்மா னிடர்திரி யக்குமுன் பலவும்
அசுத்த ஆதனான் ஆகிய ஐயநின்தொழுவேன் 9

பிரமன் மால்உருத் திரன்முதல் பெயரும்அவ் உருவும்
பரவ மாவிவ காரத்தில் கற்பிதப் பட்டு
வரநி லாம்பர மார்த்தத்தில் இல்லையோ மற்(று)அப்
பொருள் தாயநின்ற பூரணநின்அடி போற்றி 10

மருவு பேரதிட் டானமாம் யா(து)ஒரு வத்தின்
பொரு(வு)இல் சத்தையால் ஏயசத்(து) ஆகிய புவனம்
வெரு(வு)இல் சத்துப்போல் இருப்பதோ அத்தகு மெய்ம்மைப்
பொரு(வு)இ லாப்பரி பூரண நின்அடி போற்றி 11

எந்த வத்துவின் சித்தினால் சடம்என இயம்பும்
பந்தம் ஆர்சகம் ஆகிய அனைத்தும்மேற் பரவ
வந்த சித்துப்போல் விளங்குமோ அத்தகு வத்தாம்
அந்த ணாளநின் திருவடி விரும்பிவந்(து) அடைந்தேன் 12

கூறும் எந்தவத் துவின்குளிர் ஆநந்தம் அதனால்
ஈ(று)உ றாத்துக்க ரூபம் ஆகியசகத்(து) எல்லாம்
ஏறு மாகந்தம் போலத்தோன்றி டும்என்ன இயம்பின்
ஆறு சூடிநின் திருவடி அடியனேன் அடைந்தேன் 13

போற்றி சந்திர சேகரபுனல்சடா டவியாய்
போற்றி முக்கணால் புயம்பொலி பூரண பூரண
போற்றி மான்மழு(வு) ஏந்துபொன் தாமரைக் கரத்தாய்
போற்றி பத்தர்குற் றமும்குண மாய்க்கொண்டு பொறுப்போய் 14

பினாக பாணியே போற்றிபெட்(டு) அடிஅடைந் தவர்தம்
இனாத தீர்த்(து)அருள் இறையவ போற்றிஎஞ் ஞான்றும்
அனாதி ஆவன விடற்(கு)அருளும் வள்ளலே போற்றி
அநாதி முத்தனே அற்புத நிருத்தனே போற்றி 15

## வேறு

இன்னணம் துதித்து நெக்குநெக்(கு) உருகி ஈ(று)இல்அட் டாங்கமே ஆக
முன்னர்வீழ்ந்(து) எழுந்து கண்கள்நீர் வார முகிழ்த்துகை தலைமிசைக் கூப்பிப்
பன்னரும் களிப்பில் மூழ்குபு திளைத்துப பரவசம் அடைந்தமா தவனை
என்னைஆ ளுடையான் வேண்டிய வரம்என் இயம்புதி எனஅவன் இயம்பும் 16

தேவதேவேசமங்கள மூர்த்த செழுங்கனல் மதிகதிர் ஆய
கோவமா தேவயத்தருக்(கு) இனிய குணப்பெரும் குன்றமே அடியேன்
ஆவ(து)என்(று) அலையா வண்ணம்ஆட் கொண்ட அற்புத மெய்யப்பர சுடரே
ஓவம்நேர் உமையாள் பங்கனே தணவாய் உன்அருள் வேண்டும்எப் போதும் 17

சத்திய ஞானா நந்தபூ ரணனே தவாமனம் ஆதிகட்(கு) எட்டா
நித்திய நிமலா நிரம்புநின் அருளால் நிலவுமித் தரிசனம் பெற்றேன்
பத்தியும் அடைந்தேன் சித்தசுத் தியும்மேல் படைத்தனன்
ஞானம்முற்(று) உணர்ந்தேன்
முத்தியும் உற்றேன் இனிஎனக்(கு) எவனோ மொழிதரு
குறைஉள(து)ஐய 18

கருணைஅம் கடலே அடியனேன் நிமித்தம் கண்டுமுப் புவனமும்
உய்யப்
பெருகுபேர் அருளால் காட்சிதந்(து) அளித்தாய் பிறங்குபஞ் சாட்சர
சொரூபப்
பொருவில்இவ் விமானத் தோடும்இவ் இலிங்கப் பொலிவினில்
சமிவனத்(து) எவர்க்கும்
இருமையும் உய்ப்பான் திரிபுவ னேசன் எனும்திருப் பேரொடும் அமர்க
19

சிறந்துநின் இடப்பால் மரு(வு)உமை ஆளும் திரிபுவ
னேசைஎன்(று)ஒருபேர்
அறந்தரு சிறப்பில் பூணுக நினைஅவ் அங்கயற் கண்ணியை அடைந்து
பிறந்(து)உழ லாது சித்தசுத் தியும்பின் பெற்றுநின் சொரூபமே ஆக 20

அரிபிர மரும்முன் நேடியும் காணா அடிமுடிச் சமிவனத்(து) அரசே
திரிபுவ னேசன் என்றுநின் நாமம் செப்பினோர் களும்மறை ஆய
பரிபுரப் பூந்தாள் திரிபுவ னேசைகான்றநின் பால்அமர் பிராட்டி
உரியநல் நாமம் செப்பினோர் களும்மிக்(கு) உவந்துபேர் ஆநந்தம்
உறுக 21

ஒருமதுப் பிரியன் எனப்புகல் அடியேன் ஓங்குநின்(று) எனதுபால் ஓடும்
பெருநதி தனக்கும் குணாதுபால் அமைந்த பெருந்தடம் அதற்கும்நல்
இடத்தே
மருவிநின் போற்றி இருந்(து)எலாம் அடைந்த் மாண்பினால்
என்பெயர்ப் பெயர்ச்சொல்
வெரு(வு)அற முன்கொண்(டு)இவ் ஐக்கிய நாமம் விளங்கிட
வேண்டுமால் என்றும் 22

கரைஉடைத்(து) எழுந்து திரைஅலைத்(து) ஓடும் கரி(சு)அறு மதுநதி இடத்தும்
புரைஅறச் செறிந்து பூப்பொலி புட்கரணி இடத்தும்போய்ப் பிறவி
வரைஅறப் படிந்து நின்னைநின் இடப்பால் வளர்திரி புவனநா யகியை
விரைமலர் தூவிப் பணிபவர் யாரும் மிகுபெரும் போகம்வீ(டு) உறுக 23

பலபல உரைப்ப(து) என்னைஇத் தலத்துப் பத்தியின் வசித்துமா தவம்செய்
நலம்உடை யவரும் சேய்மையின் அமர்ந்து நயக்கநின் போற்றிடு வாரும்
வலம்உற நின்னைக் கண்டிடு வாரும் மதிஉறக் கேட்டிடு வாரும்
மலர்தலை உலகில் பன்னெடுங் காலம் வாழ்ந்துபின் இன்பமே உறுக 24

இத்தகு வரங்கள் வேண்டும்என்(று) இரந்தான் இரந்தன யாவையும் அளித்தே
உத்தமப் பெருமான் இலிங்கத்(து)உள் மறைந்தான் ஒப்(பு)இலா முனிவனும் அங்கண்
அத்தனைப் பலநாள் அன்(பு)உறப் பூசித்(து) அடைந்தனன் விதேகமுத் தியினைக்
கைத்தலம் குவித்து வானவர் பொழிந்தார் கற்பகப் பூமழை மகிழ்ந்தே 25

### வேறு

என்னும்அத்தலத்(து) உயர்மதுப் பிரியமா முனிவன்
கொன்னும் வாஞ்சையில் பெற்றநல் வரத்தினால் குலவி
இன்னும் நல்லவர் எண்இலார் பிரமஞா னத்தைத்
துன்னும் ஆதரத்(து) உணர்ந்(து)ஒரு சொரூபமே ஆவார் 26

### வேறு

மதுநதி மதுபுட் கரணிஎவ் இடத்தும் வயங்கிடு திரிபுவ னேசன்
பதுமமென் பூந்தாள் திரிபுவ னேசை பங்கமர் நாமகா ரணம்இம்
முதுமொழிக் கதையால் தெரிந்தனை அன்றே முழு(து)உல(கு) ஆளுமன் னவனே
எதுதெரி தரத்தக் க(து)அதை இனியாம் இயம்பிடக் கேள்என இசைத்தாம். 27

***மதுப்பிரியர் துதி உரைத்த படலம் நிறைவுற்றது***

## கண்ணப்ப நாயனார்

### (நற்கதை நம்பி அய்க்கண்)

அளவிடற்கரிய பெருமைக்குரியவரான சிவனடியார் தம் திருக்கதையைக் கூறவந்த சேக்கிழார்,

"கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்...
ஈர அன்பினர் யாதும் குறைவிலார்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ?"

என்று வியந்து, 'பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப்' பாடியருளியதே திருத்தொண்ட புராணம்.

இதில் ஒவ்வொரு நாயன்மாரின் அன்பும் பக்தியும் தொண்டும் சிறப்புடையனவே என்றாலும், அவர்களில் மூவரின் அன்பினைக் கண்டு திகைத்து நிற்கிறார் பட்டினத்தடிகள்.

'வாளால் மகவரிந்து ஊட்டவல்லேன் அல்லேன் ; மாதுசொன்ன
சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லேன் ; தொண்டு செய்து
நாளாறில் கண்ணிடந்து அப்பவல்லேன் அல்லேன் ; நான் இனிச் சென்று
ஆளாவ தெப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே.'

என்று மேற்குறிப்பிட்ட மூவர்போல, செயற்கரிய செய்து இறைவனடிக்கு ஆளாகும் இயலாமையைக் கூறிப் பாடுகிறார்.

இம்மூவருள்ளும் அன்பினிற் சிறந்த அடியார் யார் என்று நமக்குள் இயல்பாக எழும் வினாவுக்கு, மணிவாசகப் பெருமான் தன் அனுபவத்திலிருந்து விடையளிக்கிறார்.

'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாஎன்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ!'

இதையே திருக்களிற்றுப் படியாரும்,

‘கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்
கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக் கண்ணப்பர்
தாமறிதல் காளத்தி யார்அறிதல் மற்று
ஆரறியும் அன்பன்றது’

என்று வழிமொழிந்துரைப்பர்.

எனவே, நாயன்மார்களிடையே, கண்ணப்பர் தனித்து உயர்ந்த நிலையில் விளங்குவதைக் காணலாம்.

இம்மூவர் வரலாற்றையும் பாடப்போந்த சேக்கிழார் பெருமான், திருநீலகண்டர் கதையை 44 பாடல்களிலும், சிறுத்தொண்டர் வரலாற்றை 88 பாடல்களிலும், கண்ணப்பர் கதையை 186 பாடல்களிலும் பாடியுள்ளது குறிப்பிடற்குரியது. பெரியபுராணக் காப்பியத் தலைவரான சுந்தரரின் இளமைக் காலத்தையே சுருக்கமாகப் பாடியுள்ளார் சேக்கிழார். சுந்தரர் அவதரித்த நாட்டுக்கு ஒரு பாட்டு, ஊருக்கு ஒரு பாட்டு, பெற்றோரின் பெயர்களைச் சுட்டுவதற்கு ஒரு பாட்டு, அவருக்குப் பெயர் சூட்டியதற்கும் சிறுதேர் உருட்டியதற்கும் ஒரு பாட்டு, நாட்டு மன்னர் நரசிங்கமுனையர் சுந்தரரை மகன்மை கொண்டதற்கு ஒரு பாட்டு. அவர் முந்நூல் அணிந்து கல்வி பயின்று மனப்பருவம் எய்தியது வரை ஒரு பாட்டு என ஆறே பாடல்களுக்குள் சுந்தரரின் இளமைப் பருவத்தைப் பாடிமுடித்து விடுகிறார் சேக்கிழார்.

பிற நாயன்மார்களுக்கும், அவர்தம் தொழில் அல்லது தொண்டு மேற்கொள்வதிலிருந்தே, அவரது வரலாற்றைத் தொடங்கி, அத்தொண்டுக்கு ஏற்படும் சோதனை என வளர்கிறது. ஆனால் மூவர் முதலிகளில் ஒருவரான சம்பந்தப் பெருமானுக்கும் கண்ணப்பருக்குமே இளமைப் பருவ வரலாறு விரிவாகக் கூறப்பெறுகிறது.

கண்ணப்பர், பிறப்புக்கு முன்பே, அவருடைய குடிப்பெருமை கூறப்படுகிறது. பொத்தப்பி நாட்டில், உடுப்பூரில் அமைந்துள்ள காட்சிகளை, கவிச்சுவையும் இனிமையும் அழகும் பொருந்தப் பாடியிருக்கும் திறன், கவிஞர் பெருமான், ஒவ்வொரு நாயன்மாரின் ஊருக்கும் சென்று கள ஆய்வு மேற்கொண்ட பின்னரே புராணம் யாத்துள்ளார் என்பதற்குப் போதிய சான்றாக இலங்குகின்றது.

குறிஞ்சிப் பகுதியான அம்மலையூரில் காணும் காட்சிகளை யெல்லாம், நின்று நிதானமாக நமக்குக் காட்டுகிறார் சேக்கிழார்.

வேடுவர்களும், நாய்களைக் கட்டிய விளாமரங்களும், வலைகளும், பன்றி, புலி, கரடி, காட்டுப்பசு, மான் முதலியவற்றின் பார்வை விலங்குகளும் உள்ளன. பாறை முற்றத்தில் மலை நெல் முதலான உணவுப் பொருள்கள் உலர விரிக்கப்பட்டுள்ளன. வேடச் சிறுவர்கள், புலிக்குட்டி, யானைக்கன்றுகளுடன் விளையாடிக் கொண்டிருக்கின்றனர். வேட்டுவப் பெண்கள், பெண்மான்களைத் தழுவி ஆடிக்கொண்டிருக்கின்றார்கள்.

படைக் கருவிகளை உடைய வேடுவர்கள், கூட்டமாக் கூடி 'கொல்' 'எறி' 'குத்து' என்று முழங்கும் ஆர்ப்பரிப்போடு, உடுக்கையும் ஊதுகொம்பும் பறையும் ஒலிக்க மேலும் அருவியின் ஓசையும் கேட்கின்றன. ஆறலைத் துண்ணும் வேடர், வேற்றுப் புலங்களிலிருந்து வென்று கொண்டுவந்த பசுக் கூட்டங்களோடு மதம் பொழியும் யானைக் கூட்டங்களும் காணப்படுகின்றன.

மைக்குழம்பு பூசினாற்போன்ற உடலுடைய வேடுவர்கள், தம்மிடத்து அச்சமும், பிற உயிர்கள் மேல் அருளும் இல்லாதவர்கள். மலைத் தேனையும் ஊன்சோற்றையும் உண்கின்றவர்கள். அவர்களுடைய தலைவன் நாகன் என்று வேட்டுவர் தலைவனை அறிமுகப்படுத்துகிறார் சேக்கிழார்.

**'பெற்றியால் தவம் முன் செய்தானாயினும் பிறப்பின் சார்பால்**
**குற்றமே குணமா வாழ்வான்; கொடுமையே தலை**
**நின்றுள்ளான்'**

தான் பிறந்த குடியின் ஒழுக்கப்படி, நாகன் உயிர்க்கொலை செய்யும் குற்றமே வாழ்க்கை நெறியாகக் கொண்டவன் ; கொடும் செயலையே மேற்கொள்பவன். ஆனாலும் முற்பிறவியில் தவம் செய்த புண்ணியன் என்கிறார் சேக்கிழார். ஏனென்றால், அந்த முற்பிறவிப் புண்ணியத்தால் தான் கண்ணப்பன் என்ற ஒப்பற்ற அன்பின் அடியான் அவனுக்கு மகனாக அவதரிக்கின்றான்.

அடுத்த பாடலில் நாகனின் மனைவி தத்தையின் தோற்றத்தையும் அணிகலன்களையும் பற்றிக் கூறுகிறார். புலிப்பல் கோத்து

இடையிடையே சங்குமணிகள் பொருந்திய தாலியையும், மயில் பீலியும் தழையும் இணைந்த மாலையையும் அணிந்தவளாய்ப் பெண்சிங்கம் போன்று காட்சியளிக்கிறாள்.

இவர்களுடைய இனிய இல்லறத்தின் பெருங்குறையாக, 'இவர்களுக்கு இனிப் புதல்வர்ப்பேறே அரியது' என்று எல்லோரும் கூறிவிட்டனர். குழந்தை பெறும் விருப்பத்தால், தம் குலதெய்வமான குறிஞ்சி வேள் முருகப்பெருமானின் திருமுன் சென்று, வேண்டுதல் செய்து, விரதம் மேற்கொள்கிறாள் தத்தை.

'முருகனுக்கு உகந்த சஷ்டி நாளில் விரதம் பூண்டால், மகப்பேறு வாய்க்கும்' என்பதையே 'சஷ்டியில் விரதம் இருந்தால், அகத்துள் உள்ள கருப்பையில் கரு தோன்றும்' என்று முன்னோர்கள் நம்பிக்கை கொண்டிருந்தார்கள். இம்முதுமொழியே, காலப்போக்கில் 'சட்டியில் இருந்தால், அகப்பையில் வரும்' என்ற பழமொழியாக மருவியது என்பர். தத்தை விரதம் இருந்த நாட்களில், உடுப்பூர் முழுவதும், சேவற் கொடியும் மயிற்பீலிகளும் கட்டி, தோரணங்களில் மணிகளையும் கடம்ப மாலைகளையும் தொங்கவிட்டு, குரவைக் கூத்தாடி, பெரிய தேவராட்டியை வெறியாட்டுவித்து மக்களும் வழிபாடு செய்தனர்.

விரதம் நிறைவடைந்த பிறகு முருகன் அருளாலே, தத்தை கருக்கொண்டாள். தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிட்டு, திருவிழா அயர்ந்து மக்கள் விழாக் கொண்டாடினார்கள். பத்தாம் திங்களில் கருங்கடலிலிருந்து நிலா எழுந்ததுபோல், தத்தை மகவினை ஈன்றாள். குழந்தை பிறந்ததும், முத்து மணிகளை வேடர்கள் பரிசுப் பொருள்களாகப் பொழிந்தனர். வானிலிருந்தும் மலர்மழை பொழிந்தது. வேடுவர்கள் மகிழ்ச்சியோடு தம் இசைக் கருவியாகிய உடுக்கையை ஒலித்தார்கள்.

'அரிக்குறும் துடியே அன்றி அமரர் துந்துபியும் ஆர்த்த' கண்ணப்பர் அவதாரம் செய்த நாளில், வானுலகத்திலிருந்து துந்துபியும் முழங்கியது என்று குறிப்பிடுகிறார் சேக்கிழார்.

வேடுவர்களெல்லாம் வீடுதோறும் கொண்டாடி மகிழ்ந்ததோடு, ஊர்ப்பொது இடத்திலும் பெருந்திருவிழாவாகக் கொண்டாடிக்

கொண்டிருந்தார்கள். கரிய குன்றினைக் காளமேகம் ஏந்தியதைப்போல் மகனை நாகன் கையில் தூக்கினான்.

'கருவரை காளமேகம் ஏந்தியது அன்ன'

என ஓர் அழகான உவமைத் தொடரை அமைத்துள்ளார் கவிஞர். தந்தையும் மகனும் கரிய தோற்றத்தினர்தான். ஆனால் தந்தை கொடை பொழிகின்ற தலைவன் ஆதலால், அவனுக்கு மழைமேகத்தை உவமையாக்குகிறார். புலிக்குட்டி போல் வளர்ந்த குழந்தை, வேடர்மட்டுமின்றி மற்றவர்களும் வியந்து போற்றும் நற்குறிகள் பலவும் அமைந்ததாக விளங்கியது.

கையில் ஏந்தித் தாங்குவதற்கு அரிய உடலமைப்போடு குழந்தை இருந்ததால் 'திண்ணன்' என்று நாகன் பெயரிட்டு அழைக்க வேடர்கள் எல்லோரும் மகிழ்ச்சியில் ஆரவாரித்தனர். திண்ணனுக்கு, மரபுக்குரிய அணிகள் பல அணிவிக்கப்பெற்றன. மலைவேப்பங் கொட்டைகளை, அரைமணியுடன் கவடி கட்டி உடையாக அணிவித்தனர்.

திண்ணன் கருவில் தோன்றும் முன்னர்த் தொடங்கி, பிறப்பு வரை 15 பாடல்கள் பாடிய சேக்கிழார், மேலும் அவன் வளரும் நிலைகளையும் விரிவாகவே பாடுகின்றார். தெய்வங்கள் மேல் பாடப்பெறும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் இடம்பெறும் காப்பு, செங்கீரை, சப்பாணி, முத்தம், சிற்றில் சிதைத்தல் ஆகிய பருவங்கள் அமையப்பாடுகின்றார் சேக்கிழார்.

குறிஞ்சி நிலச்சிறு தெய்வங்களுக்கெல்லாம் படையல் இட்டு, வழிபாடு செய்து, குடிமக்களுக்குக் கள் விருந்தளித்து, தனக்குக் குழந்தை பிறந்த மகிழ்ச்சியைக் கொண்டாடினான் நாகன். ஓர் ஆண்டு நிறைவெய்தியதும், தளர் நடை நீங்கிய மகனுக்குப் புலி நகத்தால் செய்யப்பட்ட சுட்டியைத் தலைமயிரிலே அணிவித்து, முள்ளம்பன்றியின் முள்கோத்த, புலிப்பல் கட்டிய தாலியை மார்பில் தொங்கவிட்டனர்.

நீலமணி கோத்த சதங்கையுடன், செப்புக்காசு கட்டிய அரைஞாணும் மணியிழைத்த காதணியும் அணிந்து குழந்தை தெருவில் விளையாடினான்.

குழந்தை வாயில் நீர் ஒழுக, மழலைத் தீஞ்சொல் பேசுவது கண்டு தாய் தந்தை மகிழ்கின்றனர். திண்ணனின் வாயிலிருந்து ஒழுகும் நீரை

**புண்ணியக் கங்கை நீரில் புனிதமாம் திருவாய்நீரில்**
**உள்நினைந்து அமுதம் ஊறி ஒழுகிய மழலைத் தீஞ்சொல்**

என்று போற்றுகிறார் சேக்கிழார். பின்னர், முகலியாற்று நீரைத் தன் வாயில் நிறைத்து வந்து காளத்திநாதருக்குத் திருமஞ்சனமாட்டும் போது,

**ஒருமுனிவன் செவி உமிழும் உயர்கங்கை முதல் தீர்த்தப்**
**பொருபுனலின் எனக்கு அவன்தன் வாய்உமிழும் புனல் புனிதம்**

என்று சிவபெருமானே சிவகோசரியாரிடம் கூறும் உயர்நிலையை இப்போதே நமக்குக் குறிப்பாக உணர்விக்கிறார் சேக்கிழார் எனலாம்.

மகன் தன் சிறுகையை நீட்டி விளையாட, தந்தை பசும் தழையால் சிறுவனது இளங்கையில் அடிக்க, அதுபொறுக்காமல் குழந்தையின் கண்களில் நீர் மல்குகிறது. அந்தக் கண்

**'இருசுடர்க்கு உறுகண் தீர்க்கும் எழில் வளர் கண்'**

என்று கூறி, பின்னர் இருசுடராகிய சிவபெருமானின் இரு கண்களின் குருதிக்கும் மருந்தாகப் பயன்பட இருக்கும் நிகழ்வினை, இப்போதே குறிப்பாகச் சொல்லிப்போற்றுகிறார் சேக்கிழார்.

குழந்தையின் கண்ணீரைப் பார்த்த தாய், முத்தம் கொடுத்துக் குழந்தையைக் கொஞ்சித் தேற்றுகிறாள். சிறுதேரை உருட்டி, நாய்களைக் கட்டிய கயிற்றை அறுப்பதோடு, சிறுமியர் கட்டிய வண்டல் சிற்றில்களைச் சிதைத்து, சிறுவர்களோடு இணைந்து தெருவில் ஓடி விளையாடினான் திண்ணன்.

இவ்வண்ணமாக வளர்ந்து ஐந்து ஆண்டுகள் ஆன பின்பு, சிறுவர்களோடு வலைக் கண்ணியை எடுத்துக் கொண்டு, சோலைகளில் வேலிப்புறங்களில் திரியும் முயல், பன்றி, புலி, செந்நாய், சிங்கம் முதலியவற்றின் குட்டிகளை விரட்டிப் பிடித்து வந்து, முற்றத்தில் கட்டி வைத்து விளையாடினான் அவன்.

இவ்வாறு பகல்முழுவதும் விளையாடி வீடு திரும்பும் திண்ணனைத் தாய், கடுகின் புகையால் கண்ணேறு கழித்து, உள்ளே கூட்டிப்போய் உணவூட்டித் தூங்கச்செய்து, இரவு விடிந்ததும் ஊன்உணவு கொடுத்து விளையாட அனுப்புவாள்.

சில ஆண்டுகள் சென்றதும் வில்வித்தை பயிலும் பருவம் வந்தது. நாகன், வில்பயிற்றுவிக்கும் துறையில் சிறந்தவர்களை அழைத்து வரச்செய்து, விற்பயிற்சி தொடங்க நாள் குறித்து, வேடுவர்க்கெல்லாம் அறிவித்தான். இச்செய்தியைப் பறையறிவித்ததும், பக்கத்து ஊர்களிலுள்ள வேடுவர்களெல்லாம் வந்து குழுமினர். அவர்கள் மலையில் விளையும் மணிகள், பொன், முத்து, புலித்தோல், யானைத்தந்தம், மயிற்பீலி, தேன், கள், ஊன், பழங்கள், கிழங்குகள் முதலிய அன்புப் பரிசில்களோடு வந்து திரண்டனர். 'தெய்வங்களை வழிபட்டு வில்விழா எடுங்கள்' என்று நாகன் ஆணையிட்டான்.

இந்நிகழ்ச்சியை,

**'தேனலர் கொன்றையார்தம் திருச்சிலைச் செம்பொன் மேரு**
**வானது கடலின் நஞ்சம் ஆக்கிட, அவர்க்கே பின்னும்**
**கானஊன் அமுதம் ஆக்கும் சிலையினைக் காப்புச் சேர்த்தார்'**

என்று பாடுகிறார் சேக்கிழார்.

முற்காலத்தில் சிவனது வில்லாகிய மேரு, பாற்கடலில் நஞ்சை எழுப்பி அதை உண்ணச்செய்தது; இனி, காட்டிலே சிவனுக்கு ஊன் அமுதம் ஆக்குவதற்காக வேட்டையாடப் போகின்ற வில்லை, திண்ணனுக்குக் காப்புச் செய்தார்' என்று முரண்நயம் அமையப் பாடியுள்ளார் புலவர்பெருமான்.

சிறுவன் கையில் வில்லைச் சேர்த்ததும் எல்லோரும் அவனை வாழ்த்தினர். சமையற் தொழில் வல்ல வேடுவர்கள், மலைநெற்சோறும் மற்ற வகைச் சோறும், ஊனும் கிழங்குகளும் சமைத்து மலையெனக் குவித்தனர். செந்தினை மாவும், தேன் கலந்த ஊனும் விளாம்பழமும், ஈசலும் அருந்தி, கள்ளுண்டு மகிழ்ந்தனர்.

பச்சிலை மாலையும் மலர்க்கண்ணிகளும் சூழ, மணிகள் கோக்கப் பெற்ற வடத்தை அரையில் கட்டி, உடலெங்கும் அணிகள் சேர, வில் பயிற்சி நாள் விழாவிற்கு வந்து குழுமினர். குறிஞ்சிப் பறையும் முரசும் கொம்பும் உடுக்கையும் புல்லாங்குழலும் ஒலிக்க, வேடர்களின் ஆரவாரம் விண்ணை இடிக்க, ஆடவர்கள் வரிப்பண்பாட, பெண்டிர்கள் துணங்கைக் கூத்தாட, விழாக் கொண்டாடி ஏழாம்நாள், உச்சிப்பொழுதில் வில்லாசிரியர், திண்ணனுக்குப் பயிற்சி தொடங்கினார்.

**'அன்று முதல் நாள்தோறும் வில்லினும் மற்ற கருவிகளினும் பயிற்சி பெற்று வந்தார் திண்ணன்'** என்று கவிக்கூற்றாகப் பாடுவதையும் கடந்து, கண்ணப்பரின் மேலுள்ள அளப்பரிய அன்பும் மதிப்பும் மீக்கூர, தற்கூற்றாக,

**'கற்றனர், என்னை யாளும் கானவர்க்கரிய சிங்கம்'**
என்று பாடும் பாங்கு கண்டு நாம் வியப்பில் ஆழ்கிறோம்.

**'எல்லை இல்லாப் புண்ணியம் தோன்றி மேன்மேல் வளர்வது'** போல் திண்ணன் வளர்ந்து பதினாறு வயது எய்துகிறான்.

- *(தொடரும்....)*

## திருநாளைப் போவார்

மனத்தை உருக்கும் ஒரு மானுட வரலாறு

**(மு. பழனி இராகுலதாசன்)**

1) "பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடிய கவி வலவன்" என்பது சேக்கிழாருக்குச் சூட்டப்பட்ட மிகப்பொருத்தமான, தனித்துவமுடைய, பாராட்டுக்கிரீடம். பெரியபுராணம் குறித்து ஆய்வு செய்யும் பலரும் மறக்காமல் சுட்டிக்காட்டும் அரிய தொடர் இது. "பெரிய புராணம் ஒரு பக்திக் காப்பியம் மட்டுமல்ல, இது ஒரு வரலாற்றுக் காப்பியமும் ஆகும்" எனச் சான்றோர் பலரும் நிறுவிக் காட்டியுள்ளனர். தமிழ்த்தென்றல் திரு.வி.க., சிவக்கவிமணி, அறிஞர் ராஜமாணிக்கனார், பேராசிரியர் அ.ச.ஞா.முதலான பெருமக்கள், 'பெரியபுராணம் ஒரு வரலாற்றுக் காப்பியம்' என்பதை வலியுறுத்திச் சுட்டிக்காட்டுவர். இந்த வரிசையில், புகழ்பெற்ற திறனாய்வாளர் க. கைலாசபதி என்பாரின் கருத்தும் நினைக்கத்தக்கது ஆகும். "மத்திய காலத்துச் சேக்கிழார் ஆழ்ந்த வரலாற்று உணர்வு பெற்றிருந்தார்; அவர் தலைமையாளர்களையே பாட வந்தவர்; ஆனால் வரலாற்று உணர்வு பெற்றிருந்ததாலேயே புலையரையும் வேடனையும் உயிர்த்துடிப்புள்ள பாத்திரங்களாக ஆக்கினார்; அவர் உடையார் சார்பு உடையவர்; ஆனால் தேசம் முழுவதையும் சமுதாய உணர்வுடன் சிந்தித்தார்" என்று கைலாசபதி எழுதுகிறார். காப்பியத்தில், புலைப்பாடியும், வேடனும் பாத்திரங்களாக இடம் பெற்றிருப்பது, சேக்கிழாரின் வரலாற்று உணர்வுக்கும் சமுதாயச்

சிந்தனைக்கும் மிகச்சிறந்த சான்றுகளாக அமைகின்றன. நாம் இவ்விடத்தில் வேறு ஒரு வகையில் சிந்திக்கலாம்; அதாவது, பெரியபுராணத்தில் புலைப்பாடியும், வேடனும் இல்லையென்றால், பெரியபுராணம் வெறும் பாராயண நூலாக மட்டுமே கருதப்பட்டிருக்கும்.

2) சேக்கிழார் பெருமானின் வரலாற்று, சமுதாய உணர்வை ஆராயும்போது, அதுவும் "திருநாளைப் போவார்" நாயனாரின் வரலாற்றை ஆராயும்போது, நாம் நமது பார்வையை, அணுகுமுறையைப் பின்வருமாறு மூன்று பிரிவுகளில் வகைப்படுத்திக்கொள்ளுதல் சாலும்; அத்தகைய பகுப்பு பின்வருமாறு:
1) ஆலயப் பிரவேசம்; 2) அக்கினிப் பிரவேசம்; 3) கடையனுக்கும் கடைத்தேற்றம்.
இந்தப் பகுப்பு முறையை மேலும் வளர்த்து வினாவடிவமாக ஆக்கிக்கொள்ளலாம்.

1) திருநாளைப்போவார் என்ற நந்தனாகிய புலைப்பாடிக்கு 'ஆலயப்பிரவேசம்' ஏன் மறுக்கப்பட்டது? மறுக்கப்பட்டது நியாயம் தானா?

2) அந்தப் புலைப்பாடியை 'ஆலயப்பிரவேசம்' என்ற பெயரில் அக்கினிக்குள் புகவைத்து, ஓர் அந்தணர் கோலம் தாங்க வைத்து, அதன்பிறகு, அவர் இறைவனோடு கலந்துவிட்டார் என்று சொல்வது எந்தவகையில் நியாயம்?

3) "கடையனுக்கும் கடைத்தேற்றம்" என்று நமது இந்தியச் சான்றோர்களாகிய அண்ணல் காந்தியடிகளும் பூஜ்யர் வினோபா அடிகளும் உரத்து முழங்கினார்களே, இக்காலத்தில் வாழ்கிற நாம், அந்த முழக்கங்களையெல்லாம் சமுதாய உணர்வோடு உள்வாங்கிக் கொள்கிறோமே, அப்படி வாழ்கிற நாம் 'புலைப்பாடியாகிய கடையனுக்குக் கடைத்தேற்றம் கிடைத்ததா?' என்று கேட்கத்தானே வேண்டும்? கேட்பதுதானே இயற்கை.

சேக்கிழார் பெரியபுராணம் பற்றிக்குறிப்பிடும் அறிஞர் ஏ.வி.சுப்பிரமணிய அய்யர், "சைவ நாயன்மார்களின் கதைத் தொகுதியே பெரியபுராணம்" என்றும் "சுவைமிகுந்த கவிதைப் பாங்குடன் இதைப் பாடியிருக்கிறார் சேக்கிழார்" என்றும் குறிப்பிடக் காணலாம். இவ்வாறு எழுதிச்செல்லும் அய்யர் அவர்கள் ஓரிடத்தில், ஒரு

பொதுவான செய்தியாக, "மொத்தத்தில் தமிழில் உள்ள புராணங்களில் எல்லாம் காலத்தால் முந்தியதும், நூல் நயங்களில் முதன்மையாய் இருப்பதும் பெரிய புராணமே; அதில் சில நாயன்மார்களின் கதைகள் கனிந்த நாடகச் சுவையுடன் எழுதப்பெற்றிருக்கின்றன" என்றும் குறிப்பிடுகின்றார்.

4) சேக்கிழார் படைத்த பெரியபுராணம் 'திருநாளைப் போவார் நாயனார்' புராணப்பகுதியிலிருந்து நூல் நயங்கள் சில காண்போம். சேக்கிழார் நந்தனார் குடியிருக்கும் புலைப்பாடியை வருணிக்கிறார்; ஆறாம் பாட்டு:

"மற்று, அவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு
பெருங்குலையில்
சுற்றம் விரும்பிய கீழ்மைத்தொழில் உழவர் கிளை துவன்றிப்
பற்றிய பைங்கொடிச் சுரைமேற் படர்ந்த பழங்கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி"

இந்தப்பாடலின் திரண்டபொருள் பழங்கூரை வேய்ந்த, குடிசைகள் நிரம்பிய புலையர்கள் வாழ்கின்ற புலைப்பாடி என்பதாகும். காட்சியைச் சொற்சித்திரப்படுத்தி, உணர்வுகளைத் தூண்டுவதில் சேக்கிழார் மிகுந்த கவி ஆற்றல் படைத்தவர் என்பதற்கு இந்த ஒரு பாடலே சான்றாகும். இவ்வரிய கவிதைக் காட்சியில் ஈடுபட்ட சிவக்கவிமணி அய்யா அவர்கள், நின்று, நிதானித்து, துய்த்துத் துய்த்து உரை எழுதுகிறார்; உரை வழியே தெரிகின்ற புலையர்களின் நலிந்த வாழ்க்கை நம் நெஞ்சத்தைத் தொட்டு விடுகிறது.

கூரைமேல் ஏன் பசிய சுரைக்கொடி? கூரையோ பழங்கூரை; அதன்மேல் வேறுபிற கடினமான, சுமைகூட்டக்கூடிய செடியைப் படரவிடமுடியுமா? கூரை தாங்காதே! எனவே மிக மெல்லிய, கனமே இல்லாத சுரைக்கொடி படரவிடப்பட்டதாம்! சுரைக்கொடியும் மிகமிக மென்மை; கூரையும் பழங்கூரை; ஒன்றுக்கு ஒன்று ஆதரவாம்! அதென்ன சுரைக்கொடி? சுரைக்காய் புலையர்களுக்கு ஆகிவரும் எளிய உணவு; எனவே சுரைக்காய்க்கொடி; ஏன்? வேறுகாய் ஆகாதா? சுரைக்காய் புலால் உணவுடன் சேர்த்துச் சமைக்கும் தகுதிமிக உடையதாம்; அதாவது ருசிமிக உடையது; எனவேதான் சுரைக்காய்க்கொடி இத்தனை நலமும் நயமும் சொல்லிக் கொண்டே வரும் நமது சிவக்கவிமணி அய்யா இன்னொரு நயம் சொல்கிறார்கள்;

அந்த இடம் இலக்கிய நயம்சார்ந்த பொலிவுமட்டுமல்ல; ஏழைப் புலையர் பெருமக்களின் நலிந்த வாழ்க்கையைச் சுட்டும் அற்புதமான இடம்! உடையாரையும் இல்லாரையும் எதிர்எதிரே நிறுத்தி ஒருசமுதாய முரண்பாட்டு நிலையைச் சுட்டிக்காட்டும் அற்புதமான இடம்; இந்த ஏழைப் புலையர்கள் சுரைக்காயைத் -தான் பயிரிடமுடியும்; மேட்டுக்குடி மக்கள் சுரைக்காயை விரும்பமாட்டார்கள்; வேறு பொருளாக இருந்தால் ஆள்அனுப்பி, அதிகாரம் செலுத்திப் பறித்துக் கொண்டுபோய் விடுவார்கள்! புலையர்களின் வாழ்க்கை இப்படித்தான் அஞ்சி, அஞ்சி, அல்லல்படுகிற ஆற்றாது அழுகின்ற வாழ்க்கை என்பதைச் சிவக்கவிமணி எடுத்துரைப்பார்கள். தேங்காய், மாங்காய் என்றோ, வேறுபிற காய்கறிகளோ பயிரிட்டால், அறிஞர் அண்ணாவின் சிறுகதையில் வரும் செவ்வாழைக்கு ஏற்பட்ட கதிதானே ஏற்படும்!

சேக்கிழார் தீட்டும் சொல்லோவியச் சிறப்புக்கு மற்றுமோர் இடம்; புலைப்பாடியின் சுற்றுப்புறச்சூழல் எப்படி இருந்தது. பாடல் ஏழு; வருணிக்கிறார் சேக்கிழார்:

"கூர்உகிர் மெல்அடி அளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயில் முன்றிலில் நின்ற வள்ளுகிர் நாய்த் துள்ளுபறழ்
கார் இரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி"

மிகப்பொருத்தமான, பொருள் பொதுளிய அடைமொழிகளால் புலைப்பாடியின் தோற்றம் கவிச் சித்திரமாய் விரிகிறது. கூர்உகிர், மெல்லடி, குறும்பார்ப்பு, வள்ளுகிர்நாய், துள்ளுபறழ், கார் இரும்பு, கருஞ்சிறார், இருப்புமணி முதலான தொடர்களின் அடைமொழி களையும், அவை உருவாக்கும் உருக்காட்சிகளையும் உள்வாங்கி, உணர்ந்து மகிழ்ந்துபோகும் சிவக்கவிமணி இது மிகச்சிறந்த "தன்மை நவிற்சி அணி" என்று பாராட்டி, நமக்கு இனங்காட்டுகிறார். சிவக்கவிமணியின் உரைநயம் அல்லது உள்ளத்து நயம் ஒருபடி மேலே செல்கிறது. இவ்வாறெல்லாம் அணிநயம், அதாவது அணிநலம் புனைவதற்கு ஏனைய பிறர் உயர்ந்த இடங்களையும், சூழல்களையும் தேடுவர்; ஆனால் நமது சேக்கிழார் பெருமான் தன்மை நவிற்சி அணிக்கு, ஏனையோர் இழிவாகக் கருதும் புலைப்பாடியை இடமாகக் கொண்டுள்ளாரே என்று நெகிழ்ந்து போகிறார். இதுதான் "தெய்வப்புலமை" என்றும் சுட்டிக்காட்டுகின்றார்.

*- (தொடரும்...)*